# பணி நிரந்தரம் பெற, அரசாங்க உத்யோகம் கிடைக்க ஓத வேண்டிய திருப்பதிகம்

திருஞானசம்பந்தர் அருளிய திருமயிலைத் தேவாரம்

2ம் திருமுறை 47ம் பதிகம்

பண் : சீகாமரம்    ராகம்: நாதநாமக்ரியா







மட்டிட்ட புன்னையங் கானல் மடமயிலைக்
கட்டிட்டங் கொண்டான் கபாலீச்
சரமமர்ந்தான்
ஒட்டிட்ட பண்பின் உருத்திர பல்கணத்தார்க்
கட்டிட்டல் காணாதே போதியோ
பூம்பாவாய்.







மைப்பயந்த வொண்கண் மடநல்லார்
மாமயிலைக்
கைப்பயந்த நீற்றான் கபாலீச் சரமமர்ந்தான்
ஐப்பசி யோண விழாவு மருந்தவர்கள்
துய்ப்பனவுங் காணாதே போதியோ
பூம்பாவாய்.







வளைக்கை மடநல்லார் மாமயிலை
வண்மறுகில்
துளக்கில் கபாலீச் சரத்தான்றொல்
கார்த்திகைநாள்
தளத்தேந் திளமுலையார் தையலார்
கொண்டாடும்
விளக்கீடு காணாதே போதியோ பூம்பாவாய்.







வளைக்கை மடநல்லார் மாமயிலை
வண்மறுகில்
துளக்கில் கபாலீச் சரத்தான்றொல்
கார்த்திகைநாள்
தளத்தேந் திளமுலையார் தையலார்
கொண்டாடும்
விளக்கீடு காணாதே போதியோ பூம்பாவாய்.







ஊர்திரை வேலை யுலாவு முயர்மயிலைக்
கூர்தரு வேல்வல்லார் கொற்றங்கொள்
சேரிதனில்
கார்தரு சோலைக் கபாலீச் சரமமர்ந்தான்
ஆர்திரைநாள் காணாதே போதியோ
பூம்பாவாய்.







மைப்பூசும் ஒண்கண் மடநல்லார்
மாமயிலைக்
கைப்பூசு நீற்றான் கபாலீச் சரமமர்ந்தான்
நெய்ப்பூசு மொண்புழுக்க னேரிழையார்
கொண்டாடும்
தைப்பூசங் காணாதே போதியோ
பூம்பாவாய்.







மடலார்ந்த தெங்கின் மயிலையார் மாசிக்
கடலாட்டுக் கண்டான் கபாலீச்
சரமமர்ந்தான்
அடலானே றூரு மடிக ளடிபரவி
நடமாடல் காணாதே போதியோ
பூம்பாவாய்.







மலிவிழா வீதி மடநல்லார் மாமயிலைக்
கலிவிழாக் கண்டான் கபாலீச்
சரமமர்ந்தான்
பலிவிழாப் பாடல்செய் பங்குனி
யுத்தரநாள்
ஒலிவிழாக் காணாதே போதியோ
பூம்பாவாய்.







தண்ணா அரக்கன் தோள் சாய்த்துகந்த
தாளினான்
கண்ணார் மயிலைக் கபாலீச்
சரமமர்ந்தான்
பண்ணார் பதினெண் கணங்கடம்
மட்டமிநாள்
கண்ணாரக் காணாதே போதியோ
பூம்பாவாய்.







நற்றா மரைமலர்மே னான்முகனு
நாரணனும்
முற்றாங் குணர்கிலா மூர்த்தி
திருவடியைக்
கற்றார்க ளேத்துங் கபாலீச் சரமமர்ந்தான்
பொற்றாப்புக் காணாதே போதியோ
பூம்பாவாய்.







உரிஞ்சாய வாழ்க்கை யமணுடையைப்
போர்க்கும்
இருஞ்சாக் கியர்க ளெடுத்துரைப்ப
நாட்டில்
கருஞ்சோலை சூழ்ந்த கபாலீச்
சரமமர்ந்தான்
பெருஞ்சாந்தி காணாதே போதியோ
பூம்பாவாய்.







கானமர் சோலைக் கபாலீச் சரமமர்ந்தான்
தேனமர் பூம்பாவைப் பாட்டாகச்
செந்தமிழான்
ஞானசம் பந்த னலம்புகழ்ந்த
பத்தும்வல்லார்
வானசம் பந்தத் தவரோடும் வாழ்வாரே.



